உ

ஸ்ரீ சற்குருப்யோ நம:

# நாநா ஜீவ வாத கட்டளை,
# வியாக்கியானம்.

---

கோவிலூர் மடம் பாடத்திலுள்ளது.

இஃது

கோவி[illegible]ர் ஆதீன மடாலயம் எட்டாவது பட்டம்

மஹா சன்னிதானம்

ஸ்ரீல[illegible]சாமஸுந்தர ஞானதேசிக

ஸ்வாமிகளின்

பாதச்சரமும்;

சிக்கல் - பொருள்வைத்தசேரி,

கோ. வூ. பொ. [illegible]ாலயத் தலைவருமாகிய

ஸ்ரீ [illegible]. இராமலிங்க சுவாமிகள்

அவர்களால்

அச்சியற்றி வெளியிடப்பட்டது.

---

அச்சிட்டோர்:

அருணா அச்சகம், நாகப்பட்டினம்.

1983.

8-1 29

உ

ஸ்ரீ சற்குருப்யோ நம:

# நாநா ஜீவ வாத கட்டளை, வியாக்கியானம்.

கோவிலூர் மடம் பாடத்திலுள்ளது.

இஃது

கோவிலூர் ஆதீன மடாலயம் எட்டாவது பட்டம்

மஹா சன்னிதனாம்

**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகளின்**

பாதசேகரனும்,

சிக்கல் - பொருள்வைத்தசேரி,

கோ. ஆ. பொ. மடாலயத் தலைவருமாகிய

**ஸ்ரீ சோம. இராமலிங்க சுவாமிகள்**

அவர்களால்

அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அச்சிட்டோர்:

அருணா அச்சகம், நாகப்பட்டினம்.

1983.

உ
சிவமயம்.

# முகவுரை.

பரம காருணிகரான ஸ்ரீ வியாச பகவான் இருக்கு முதலிய வேதங்களை சுமந்து பயிலர் முதலிய மாணுக்கர்கள் வாயிலாக உலகின்கண் பரவச் செய்ததுமன்றி ஜீவ பிரஹ்ம ஐக்கியத்தை உபதேசிக்கும் ஞான காண்ட வடிவமாகிய உபநிஷதங்களின் சாரமாக 555 பிரஹ்ம சூத்திரங்களை அருளிச் செய்தனர். அத்தகைய பிரஹ்ம சூத்திரத்திற்கு உலகமுய்ய ஆவிர்ப்பவித்த ஸ்ரீ சங்கர பகவத் பூஜ்யபாத ஆசரிய ஸ்வாமிகள் அருளிச் செய்த பிரஹ்ம சூத்திர பாஷிய கருத்துக் இயைய இந்த நாநா ஜீவ வாத கட்டளையின் வியாக்கியானம்,

கோவிலூர் ஆதின குரு மஹா சன்னிதானங்களின் வாயிலாக அப்பப்ப பாடங்கேட்கும் முமூட்சுகள் எழுதிப் படித்து வந்ததை இப்போது அச்சு நூலாக எனது குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகேந்திரர் அருண் வலிமையை கொண்டு நம்மாள் கோ. ஆ. பொ. மடாலயத்தின் வெளியீடாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம்.



கோ. ஆ. பொ. மடம்,
பொரவச்சேரி.
17—3—1983.

இங்ஙனம்,
**சோம. இராமலிங்க சுவாமிகள்**
தலைவர்.

உ

# நாநா ஜீவ வாதக் கட்டளையின் வியாக்கியானம்.

---

காப்பு.

ஆனைமுக னறுமுக னம்பிகை பொன்
னம்பலவன், ஞானகுரு வாணியையுண்டு.

சிறப்புப்பாயிரம்.

---

இப்புவியினிடையே யெழுமிர சதம்போ
லென்றுமா யிலகியின் பாகி
யொப்பிட வேது மின்றிய பிரமத்
துற்றிடும் பகுதிமுன் னுய
வப்பிர பஞ்ச முறைமையைத் தால
வருந்ததி நியாமே யென்ன
செப்பினன் யாருந் தெளிவுறச் சேஷாத்
திரிசிவ னெனனுமா தவனே.

---

மும்மூர்த்திகள் வணக்கம்.

விருத்தம்

திருவார் பொருள்வைத் திருநகரில்
திகழும் ஞானத் தினமணியைத்
கருவார் பிறவிக் கடல்கடத்திக்
கதியை அருளுங் கண்மணியை
உருவார் உகந்த லிங்கனெனும்
உண்மை யறிவா னந்தனை நம்
மருவார் மரையாம் மனதிலுற வைத்தே
நாளும் வாழ்த்திடுவாம்!

தண்ணார் சோலைச் சமிவனத்தும்
தகைசால் ஞானத்தோர் மனத்தும்
விண்ணோர் புகழ விளங்கியொரு
வேதத்தலையில் வீற்றிருக்கும்
கண்ணோர் முத்து ராமலிங்கக்
கவிஞர் முனியின் திருக்கழலை
மண்ணூனுர வணங்கி நிதம்
வருவெம்பிறவி மாற்றிடுவாம்!

நல்லோர் புகழத் திருமரபில்
நலமார் எட்டாங் குருபரனாய்
வல்லோர் கேட்க வண்டமிழில்
வளமார் வேதாந்தப் பொருளைச்
சொல்லும் சோம சுந்தரனும்
துறந்தோர் போற்றுஞ் சுகமுனியின்
வில்லேர் கழலை விரும்பிநிதம்
மேவிச் சூழ்ந்தே வினைவெல்வாம்!

இயற்றியவர்: **திருநீலகண்ட ஷண்முகானந்தசாமிகள்.**

---

முக்கனி பிழிந்து தேன்கலந் தனைய
மொழியுறு தீஞ்சுவை யொருநன்
மக்களுக் குதவுமறை முடிமொழிக்கு
மாண் பொருண் மலர்ந்திடு வலியு
மெக்கலை களுக்கு மிருங்கரை யாகு
மெழில்பெறு சாந்தியுந் திரண்டு
பொக்கம தொழித்திங் யெமைத்தர வெழுந்த
பொனம்பல விறைபதந் தொழுவாம்.

உ

ஓம் மகா கணபதயே நம:
ஸ்ரீ சற்குருநாதன் துணை.

**கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர் மடாலயத்தில் சிறப்பாக நடக்கும் வேதாந்த சாஸ்திர நாநா ஜீவ வாதக்கட்டளை வியாக்கியானம்.**

## அவதாரிகை.

ஸ்ரீ சேஷாத்திரி சிவனார் என்னும் இன்னூலாசிரியர் தாமடைந்த அப்ரதிபந்த அபரோட்ச சாட்சாத்கார ஞானத்தை, இவ்வுலகிலுள்ள சாதன சதுட்டய சம்பன்னரான மந்தன், மந்ததரன், தீவிரன், தீவிர தரன் என்னப்பட்ட சகல அதிகாரிகளும் எளிதில் அடைந்து ஆநந்தாதிதர்கள் ஆகுதற் பொருட்டு இருக்காதி நான்கு வேதத்தினுள் சாமவேத முடிவா யுள்ள சாந்தோக்கிய உபநிடதத்திற் கூறப்பட்ட தத்துவமசி மகா வாக்கியத்தினது அர்த்தத்தை இந் நூலில் அத்தியாரோப அபவாதக் கிரமமாகக் கூறு கின்றார்.

## வியாக்கியானம்.

நான் கர்த்தா, போக்தா, ஞாதா வென்கின்ற நாநா ஜீவ பேத வேறுபாடுகளை; நான் அகர்த்தா, அபோக்தா, அசங்கன், சின்மாத்திரன் என்கின்ற தத்துவ ஞானத்தினால் வாதித்து, ஏகரூபமாயிருக் கின்ற வஸ்துவைத் தெரிவிக்கிறதற்குப் படிக்கிரமமா யிருத்தலினால் இந் நூலுக்கு, நாநா ஜீவ வாதக் கட்டளை என்று பெயராயிற்று.

அல்லது, நாநா ஜீவர்கள் உண்டெனக் கூறி அந் நாநா ஜீவர்களின் பந்த மோட்சங்களை அத்தியாரோப அபவாதக் கிரமத்தால் உணர்த்துவதால் இந்நூற்கு, நாநா ஜீவ வாதக் கட்டளை என்று பெயராமெனினும் அமையும்.

நித்த, சுத்த, புத்த, முத்த, சத்திய, பரமானந்த, அத்வைத மாதிய விலக்கணங்களைப் பொருந்தி பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருப்பது **பிரம்மம்.**

இப்பிரம விலக்கணங்களுள்ளே, பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அந்நியோன்னியாபாவம், அத்தியந்தாபாவம் என்னும் நான்கு அபாவங்களும் விடுபட்டுச் சதோதிதமா யிருப்பது **நித்தம்.**

பிரம்மத்துக்கு நித்த இலட்சண நிமித்தமான நான்கபாவங்களின் இன்மை எதனாலெனின்; அநாதியாயும், நாசமற்றதாயும், சர்வான்மக மாயும், சத்து ரூபமாயு மிருத்தலா லென்க.

மாயை மாயா காரியங்களான ஜக ஜீவ பர மென்னும் முப்பத்தைந்து தத்துவங்களின் அசுத்தங்களின்றி இருப்பது **சுத்தம்.**

ஜாதி, வருண, ஆசிரமங்களிலும், தர்மா தர்மங்களிலும், அவற்றின் பலன்களான சுவர்க்க நரகங்களினும், அவற்றின் சேஷங்களான அனந்தங்கோடி ஜனனங்களிலும், தொடக்குற் றலைவதுவே சீவனுக்கு **அசுத்தம்.**

சிருட்டியாதி பஞ்ச கிருத்தியங்களே ஈசுவரனுக்கு **அசுத்தம்.**



சங்கோச விகாசங்களே மாயைக்கு **அசுத்தம்.**

அதிஷ்டானத்தை மறைத்தலும், தத்துவ ஞானத்தாற் கெடுவதுமே அவித்தைக்கு **அசுத்தம்.**

நவத்துவாரங்களிலும் மலம் ஒழுகிக்கொண்டிருத்தலே ஸ்தூல சரீரத்துக்கு **அசுத்தம்.**

இராகத் துவேஷாதி குணங்கள் சூக்கும சரீரத்திற்கு **அசுத்தம்.**

மலம், மூத்திரம், குப்பை, சேரி, மயானம், இவைகள் பிருதிவிக்கு **அசுத்தம்.**

அலை, திவலை, நுரை, குமிழி, கலங்கல், பாசி முதலியவைகள் அப்புவிற்கு **அசுத்தம்.**

புகை, பொறி, பாகம் இவைகளே அக்கினிக்கு **அசுத்தம்.**

நற்கந்தம், துற்கந்தம், மிசிரகந்தங்கள் வாயுவிற்கு **அசுத்தம்.**

இடி, குமுறல், மின்னல், மேகம், தூளி படலங்களினுல் ஆகாசத்திற்கு **அசுத்தம்.**

அந்தக்கரண விருத்தி ஞானம் போலத் தோன்றித் தோன்றிக் கெடாமல், நித்திய ஞானரூபமா யிருப்பதால் **புத்தம்.**

அஞ்ஞானம் அதன் காரியமான பாச பந்தங்களினின்றும் விடுபட்டு இருத்தலால் **முத்தம்.**

தினம், மாதம், வருடம் முதலிய காலங்கடோறும், ஜனனங்கள் தோறும் தோற்று நின்ற அவஸ்தாத்திரயங்களிற் றோன்றி நசிக்கும் பஞ்ச கோசங்களுக்கு

அல்லது, நாநா ஜீவர்கள் உண்டெனக் கூறி அந் நாநா ஜீவர்களின் பந்த மோட்சங்களை அத்தியா ரோப அபவாதக் கிரமத்தால் உணர்த்துவதால் இந் நூற்கு, நாநா ஜீவ வாதக் கட்டளை என்று பெயராமெனினும் அமையும்.

நித்த, சுத்த, புத்த, முத்த, சத்திய, பரமானந்த, அத்வைத மாதிய விலக்கணங்களைப் பொருந்தி பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருப்பது **பிரம்மம்.**

இப்பிரம விலக்கணங்களுள்ளே, பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அந்நியோன்னியாபாவம், அத்தியந்தாபாவம் என்னும் நான்கு அபாவங்களும் விடுபட்டுச் சதோதிதமா யிருப்பது **நித்தம்.**

பிரம்மத்துக்கு நித்த இலட்சண நிமித்தமான நான்கபாவங்களின் இன்மை எதனுலெனின்; அநாதியாயும், நாசமற்றதாயும், சர்வான்மக மாயும், சத்துரூபமாயு மிருத்தலா லென்க.

மாயை மாயா காரியங்களான ஜக ஜீவ பர மென்னும் முப்பத்தைந்து தத்துவங்களின் அசுத்தங்களின்றி இருப்பது **சுத்தம்.**

ஜாதி, வருண, ஆசிரமங்களிலும், தர்மா தர்மங்களிலும், அவற்றின் பலன்களான சுவர்க்க நரகங்களினும், அவற்றின் சேஷங்களான அனந்தங்கோடி ஜனனங்களிலும், தொடக்குற் றலைவதுவே **சீவனுக்கு அசுத்தம்.**

சிருட்டியாதி பஞ்ச கிருத்தியங்களே ஈசுவரனுக்கு **அசுத்தம்.**



சங்கோச விகாசங்களே மாயைக்கு **அசுத்தம்.**

அதிஷ்டானத்தை மறைத்தலும், தத்துவ ஞானத்தாற் கெடுவதுமே அவித்தைக்கு **அசுத்தம்.**

நவத்துவாரங்களிலும் மலம் ஒழுகிக்கொண்டிருத்தலே ஸ்தூல சரீரத்துக்கு **அசுத்தம்.**

இராகத் துவேஷாதி குணங்கள் சூக்கும சரீரத்திற்கு **அசுத்தம்.**

மலம், மூத்திரம், குப்பை, சேரி, மயானம், இவைகள் பிருதிவிக்கு **அசுத்தம்.**

அலை, திவலை, நுரை, குமிழி, கலங்கல், பாசி முதலியவைகள் அப்புவிற்கு **அசுத்தம்.**

புகை, பொறி, பாகம் இவைகளே அக்கினிக்கு **அசுத்தம்.**

நற்கந்தம், துற்கந்தம், மிசிரகந்தங்கள் வாயுவிற்கு **அசுத்தம்.**

இடி, குமுறல், மின்னல், மேகம், தூளி படலங்களினுல் ஆகாசத்திற்கு **அசுத்தம்.**

அந்தக்கரண விருத்தி ஞானம் போலத் தோன்றித் தோன்றிக் கெடாமல், நித்திய ஞானரூபமா யிருப்பதால் **புத்தம்.**

அஞ்ஞானம் அதன் காரியமான பாச பந்தங்களினின்றும் விடுபட்டு இருத்தலால் **முத்தம்.**

தினம், மாதம், வருடம் முதலிய காலங்கடோறும், ஜனனங்கள் தோறும் தோற்று நின்ற அவஸ்தாத் திரயங்களிற் றேன்றி நசிக்கும் பஞ்ச கோசங்களுக்கு

வேருய், அவைகள் உண்டாவதற்கு முன்னும், உண்டாகி அழிந்த பின்னும், மத்திய காலத்திலும், என்றும் ஒரே பிரகாரமா யிருத்தலால் **சத்தியம்.**

இஷ்ட பதார்த்தங்களான தனம், புத்திரன், சரீரம் முதலிய விஷயங்களிலுள்ள பிரீதியானது கைவிடப்படினும், தன்பாலுள்ள பிரீதியானது கைவிடப்படாமல் பரமப் பிரேமைக்கு விஷயமா யிருத்தலால் தானுகிய பிரமம், **பரமானந்தம்.**

சஜாதீய விஜாதீய சுவகதபேத ரகிதமாயிருப்பதுவே **அத்வைதம்.**

ஒரு கிரகத்தைக் குறித்து ஓர் ஊரும், அதைக் குறித்து ஒரு தேசமும், அதைக் குறித்துச் சர்வ தேசங்களுக்கு மிடமாகிய பிருதிவியும், அதைக் குறித்து அப்புவும், அதைக் குறித்து அக்கினியும், அதைக் குறித்து வாயுவும், அதைக் குறித்து ஆகாசமும், அதைக் குறித்து விட்சேப சத்தியும், அதைக் குறித்து மூலப் பிரகிருதியும் பெரிது. அந்த மூலப் பிரகிருதியும் மண்ணிற் கடசத்தி போலப் பிரம்மத்தின் ஏகதேசத்திற் கற்பிதமா யிருத்தலால் பெரிதுக்கெல்லாம் பெரிதா யிருப்பது **பிரம்மம்.**

தத்பதம், துவம்பதம், அசிபதம் என்னும் மூன்றுக்கும் சாட்சியா யிருப்பது **சர்வ சாட்சியாம்.**

துவம்பதத்திற்கு:— தூலம், சூக்குமம், காரணம் என்னுஞ் சரீரத்திரயமும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் அவஸ் தாத்திரயமும்; விசுவன், தைஜசன், பிராக்ஞன் என்னும் அபிமானித்திரயமும் கூடஸ்தருமாகிய பத்துஞ்சேர்ந்து வாச்சியம் **கூடஸ்தர்** இலட்சியம்.



தத்பதத்திற்கு:— விராட்டு, இரண்யகர்ப்பம், அவ்வியாகிருதம் என்னுஞ் சரீரத் திரயமும்; சிருட்டி, திதி, சம்ஹாரம் என்னும் அவஸ்தாத் திரயமும்; வைசுவாநரன், சூத்திராத்மா, அந்தர்யாமி என்னும் அபிமானித் திரயமும், பிரம்மமுமாகிய இந்தப் பத்துஞ் சேர்ந்து வாச்சியம் **பிரம்மம்** இலட்சியம்.

அசிபதத்திற்கு:— சத்ரூப சத்தி, சித்ரூப சத்தி, ஆனந்தரூபசத்தி, என்னுஞ் சரீரத்திரயமும்; சர்வானந்தம், சர்வப் பிரகாசம், சர்வ வியாபகம் என்னும் அவஸ்தாத்திரயமும்; பரமானந்தர் தேஜோமயர், பரிபூரணர் என்னும் அபிமானித்திரயமும்; சுத்தப் பிரம்மமும் ஆகிய பத்துஞ் சேர்ந்து வாச்சியம் **சுத்தப் பிரம்மம்** இலட்சியம்.

அதிரிசியமாயும், சுயம்சித்தாயும் இருப்பதால் வாக்கிற்கும் மனத்திற்கும் விஷய மாகாமை **அதீதம்.**

விசிரிம்பித்தல் = வெளிப்படுத்தல், அவிகிருதம் = வேறுபாடற்றது.

தேச, கால, வஸ்துக்களால் கண்டமற்றது **அகண்டம்.**

நீரினுற் பூரிதமான கடம் போலப் பஞ்சகோசங்கள் பூர்வ பூர்வம், உத்தரோத்தரங்களாற் பூரிதமாய்; ஜீவனுலும் பூரிதமாயுள்ள பஞ்சகோசங்களாற் பஞ்ச

பூதங்கள் பூரிக்கப்பட்டு அப்பூதங்களாற் பூரிக்கப் பட்டிருப்பது ஜகத்து. அந்தச் ஜகத்தில் எங்கனும் வியாபித்திருக்கும் மாயா விஷிட்டனும் பிரம்த்தாற் பூரிதமாய் பிரம்மமாகிய தன்னைப் பூரிப்பதற்கு வேறொன்று மில்லாமையினுற் பிரம்ம ரூபமாகிய தான் **பரிபூரணம்.**

திரிகாலா பாத்தியமா யுள்ளது **சத்து.**

சர்வப் பிரகாசக ஞான சொரூபமா யிருப்பது **சித்து.**

(அல்லது) எப்படி, சூரியன் தீபாதி சாதனுந்தர அபேட்சையின்றித் தானும் பிரகாச ரூபமாய் இருந்து கொண்டு, கடாதி ரூப பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக் கின்ருனே; அப்படிச் சூரியாதி அஷ்டப் பிரகாசங்களை யும் அபேட்சியாமல் சுயம்பிரகாசமாயிருந்து கொண்டு ஆகாசாதி சர்வப் பிரபஞ்சங்களையும் பிரகாசிப்பிக் கின்றதே **சித்து.**

நித்திய, நிருபாதிக, நிரதிசய, சுக சொரூபமா யிருப்பது **ஆனந்தம்.**

ஜகத்திற்குக் காரணமாயும், முக்குண சாம்யா வஸ்தா ரூபமாயிருப்பது **மூலப் பிரகிருதி.**

மாயை, அவித்தை, அஞ்ஞானம், சக்தி, பிரகிருதி என்பன ஒரு பொருட் சொற்கள்.

பின்னம், அபின்னம், பின்னுபின்னம்; சத்து, அசத்து, சதசத்து; சாவயவம், நிரவயவம், சாவயவ



நிரவயவம் என்னும் ஒன்பது விதத்தாலும், நிருபிக்க முடியாமல் அநிர்வசனீய பாவ பதார்த்த மாயிருப்பது; **மாயை.**

இதின் விபரம் வருமாறு:-"ஈண்டு நாநா வானவை அற்பமுமில்லை" என்னுஞ் சுருதி வசனத்தால் மாயை சேதனத்தோடு பின்ன மென்பது நிஷேதிக்கப்படுகிறது ஜட சேதனங்களுக்கு அபேதங் கூடாமையின் மாயை சேதனத்தோடு அபின்ன மென்பதுங் கூடாது. பின்னத் துவா, பின்னத்துவங்கள் பரஸ்பரம் விரோதிகளாத லால் மாயை சேதனத்தோடு பின்னு பின்ன மென் பதுங்கூடாது.

அத்வைதப் பிரதிபாதக சுருதி விரோதத்தால் மாயை சத்தென்பதுங் கூடாது. பிரபஞ்ச காரணத் தன்மை கூடாமையால் மாயை, துச்சத்துவரூப அசத்து ரூபத்தன்மை என்பதுங்கூடாது. பரஸ்பரம்விரோதிகள் ஆதலின் மாயையைச் சதசத் என்பதுங் கூடாது.

அப்படியே மாயையைச், சாவயவம் என்று ஒப்பிடில் நியாய மதத்தில் திரவிய ஆரம்பக உபாதானத்தை அவயவ மென்றனர். சாங்கியாதி மதங்களில், திரவிய ரூப பரிணுமமுடைய உபாதான காரணத்தை அவயவ மென்றனர்: உபாதான காரணத்தையே அவயவ மென்னின்! சப்தத்திற்குபாதான காரணமான ஆகாய மும், சப்த குணத்திற்கு அவயவமாம். அப்படியே தமது குணங் கிரியைகட்குபாதான காரணமான கடாதிகளும் உருவ முதலிய குணங்கட்குஞ் சலனரூபமான கிரியைக் கும் அவயவமாம். ஆதலால், திரவிய உபாதான காரணத்தை அவயவ மென்றர். அன்னியங்களின்

உபதான காரணத்தை அவயவ மென்கிலர். அவயவத்தினின்றும் ஜன்னிய மானதை சாவயவ மென்பர். மாயை திரவியமாயின் அதற்குச் சாவயவங் கூடும்; திரவியம் திரவியத்துவம் இரண்டும் அதற்குப் பொருந்தாது என்னே? நித்தியா நித்திய பேதத்தால் திரவியமிருவகைத்தாம், மாயையை நித்தியத் திரவிய ரூபமாய் ஒப்பிடில் அதற்குச்சாவயவத்துவங் கூறுதல் அசங்கத்துவமாம். அப்படியே, ஞானத்தால் மாயை நாசமாக வேண்டுவது மில்லை அநித்தியத் திரவியரூபமாகவொப்பிடில், அதனது அவயவமும், ஆத்மாவினும் பின்னமாகலின் அனித்தியமாம். அவயவத்தின் அவயவமும் அனித்தியமாதலால், அனவஸ்தா தோஷம் வரும். அந்திய அவயவத்தைப் பரமாணுவைப் போல நித்தியமாமென் றெப்பிடில் அத்வைதப் பிரதிபாதக சுருதிக்கு விரோதம் வரும். நியாய மதத்தில் பரமாணுவையுஞ் சாங்கிய மதத்தின் பிரதானத்தையும் நித்தியமாக அங்கீகரித்திருப்பது சுருதி விரோதமாம். இவ்வாற்ருல், திரவியத்துவத்தின் அபாவத்தால் மாயையைச் சாவயவத்துவம் என்பதுங் கூடாது. அப்படியே உபதான காரணத்தன்மை கூடாமையின், மாயையை நிரவயவ மென்பதுங் கூடாது. சாவயவமே உபாதான காரணமாம். நியாய மதத்தில் சப்தத்திற்கு உபாதான காரணமான ஆகாசத்தை நிரவயவமென் றெப்பினர் அதுவும், ஆத்மாவினின்றும் ஆகாசம் உண்டாயிற்று என்னுஞ் சுருதிக்கு விருத்தமாம்.

அப்படியே, துவியணுகத்தின் உபாதான காரணமான பரமாணுவை நிரவயவமென் றெப்பினர் அதுவும்



நிரவயவ பரமாணுவின் சையோகம் கூடாது. என்பது முதலிய தோஷத்தால் சூத்திரகாரர் (வியாசர்) சாரீரக சாஸ்திரத்தின் துவிதீய அத்தியாயத்திலுள்ள துவிதீய பாதத்தில் நிஷேதித்திருக்கின்றனர். இவ் வாற்ருல் மாயையை நிரவயவ மென்பதுங் கூடாது. அப்படியே, சாவயவத்வ நிரவயவத்வ தர்மங்கள் பரஸ்பரம் விரோதிகளாகலின் மாயையைச் சாவயவ நிரவயவ மென்பதுங் கூடாது. இவ்வாறு எவ்வித தர்மத்தினுலும் நிரூபித்தற்கு அசக்கியமாகலின் மாயை அநிர்வசனீயமாம்.

மாயா சப்தார்த்தம்:- யா = யாது, மா = இல்லையோ அது மாயை.

அதற்கு உபாதித்துவம் எங்ஙனமெனின் :— சர்வக்ஞனுகிய ஈஸ்வரன் பிரதிபலித்தற்கு உபாதியாயிருத்தலால்; சர்வக்ஞ உபாதி.

அதற்குக் காரண சரீரமெனும் பெயர் வந்தது எப்படி எனின்:— ஈஸ்வரனது விராட்டு, இரண்யகர்ப்ப மென்னுங் காரிய சரீரங்களிரண்டிற்கும் மூலமாயிருத்தலால்; ஈஸ்வர காரண சரீரம்.

ஈஸ்வரனுக்குள்ள கல்யாண குணங்கள் எவை எனின்:— சர்வஞ்ஞத்துவம், சர்வேஸ்வரத்துவம், சர்வாந்திரியாமித்துவம், சர்வ சக்தித்துவம், சர்வ காரணத்துவம், சர்வ நியந்தரத்துவம் முதலியனவாம்.

இந்தக் குணங்களில் சர்வஞ்ஞத்துவம் யாது எனின்:- சாமானியமாகவும், விசேஷமாகவும், சர்வப் பிரபஞ்சத்தையும் அறியும் தன்மை ஆம்.

அணிமாதி அஷ்ட ஐஸ்வரிய சம்பந்தத்துவம் **சர்வே ஸ்வரத்துவம்.**

அணிமாதி அஷ்ட ஐஸ்வரியமாவன:- அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈஸத்துவம், வஸித்துவம், என்னுமிவைகளாம்.

சர்வ ஜீவர்களுடைய புத்திகளிலுமிருந்து தேகாதிப் பாவைகளை, அபிமான மென்கிற கயிற்றாற் பூட்டி, ஜன்மாந்திர கன்ம வாசனைகளின் படி, விதி நிஷேத வழியே ஆட்டி வைப்பது **சர்வாந்திரியாமித்துவமாம்.**

சர்வ காரியப் பிரபஞ்சத்தின் காரண ரூபமாகிய சர்வ சக்திகளையு முடையது **சர்வ சக்தித்துவமாம்.**

தூல சூக்கும ரூப சர்வ ஜகத்திற்கும் அபின்ன நிமித்தோபாதான காரணத் தன்மை, (உலண்டுப் பூச்சிபோல) **சர்வ காரணத்துவாம்.**

சமுத்திரம் அணை கடவாமலும், சூரிய சந்திராதிகள் நியமம் தவருமலும், இருக்கும்படி அவைகளனைத்தையுந் தமதாணையி னிருத்தும் தன்மையே **சர்வ நியந்திரத்துவம்** ஆம்.

வித்தையை விரோதியாக உடையது **அவித்தை.** சீவர்களுடைய தூலஞ் சூக்குமம் என்னு மிருவகைக் காரிய சரீரங்களின் மூலமாகையால் இதற்கு (இந்த அவித்தைக்கு) சீவ காரண சரீரம் என்னும் பெயரும் வந்தது. சீரணித்துப் போவதால் **சரீரம்.**

தார தம்மியமாவன:— மலின சத்துவரூப அவித்தையின் கண்ணுள்ள சத்துவ குணத்தின் ஏற்றத் தாழ்ச்சி.



**கிஞ்சிக்ஞன்** = அற்ப அறிவுடையவன்.

சாக்கிர முதல் மோட்ச பரியந்தம் சரீரத் திரயங்களில், நானென்னு மபிமான முடையவனாய் ஜீவித்துக் கொண்டிருத்தலால் **சீவனும்.**

சித்துப் போலத் தோன்றியுஞ் **சித்து** லட்சண மின்மையால் **சிதாபாசன்.**

பிராக்ஞன்:- மிகுந்த அறிவுடையவன் அல்லது சுழுத்தியில் அவித்தையை விஷயமாக உடைய அவிநாசி ரூபப் பிரக்ஞையை யுடையவன்.

தத்துவ ஞான நிஷ்டன்:— பிரம்மான்மாக்களின் அபேதத்தை விஷ்யம் செய்வதான ஞானத்தில், நிஷ்டையுடையவன். (அல்லது) ஜக ஜீவ பரமாகிய 35 தத்துவங்களும் ஓர் அவஸ்தையிற் கண்டது, ஓர் அவத்தையி லில்லாமல் வியதிரேகித்துப் போகிறபடியால் இந்த 35 தத்துவங்களும் அதத்துவ மென்று கண்டு முப்பத்தாரும் தத்துவமாகிய இயாதார்த்த தத்துவமே தான் என்றறிந்து அதில் ஸ்திதி பெற்றிருப்பவனே தத்துவ ஞான நிஷ்டன்,

கர்ம நிஷ்டன்:— இக லோகத்திற்குரிய உழவு, தொழவு, வரைவு, வாணிபம், சிற்பம், வித்தை முதலியனவும்; பர லோகத்திற்குரிய, இயக்ஞம், தானம், தவம், விரதம், சீலம், உபாசனை முதலியனவுமாகிய கிருத்தியங்களில் நிஷ்டை யுடையவன்.

கிரந்தி = முடிச்சு. சற்குரு = சத்தை யுபதேசிப்பவன். குருவென்பதில் கு = அஞ்ஞானம்; ரு = ஞானம், ஆகவே ஞானத்தால் அஞ்ஞானத்தை நிவிர்த்தி செய்பவரே குருவாவர்.

அணிமாதி அஷ்ட ஐஸ்வரிய சம்பந்தத்துவம் சர்வே ஸ்வரத்துவம்.

அணிமாதி அஷ்ட ஐஸ்வரியமாவன:- அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈஸத்துவம், வஸித்துவம், என்னுமிவைகளாம்.

சர்வ ஜீவர்களுடைய புத்திகளிலுமிருந்து தேகாதிப் பாவைகளை, அபிமான மென்கிற கயிற்றாற் பூட்டி, ஜன்மாந்திர கன்ம வாசனைகளின் படி, விதி நிஷேத வழியே ஆட்டி வைப்பது சர்வாந்திரியாமித்துவமாம்.

சர்வ காரியப் பிரபஞ்சத்தின் காரண ரூபமாகிய சர்வ சக்திகளையு முடையது சர்வ சக்தித்துவமாம்.

தூல சூக்கும ரூப சர்வ ஜகத்திற்கும் அபின்ன நிமித்தோபாதான காரணத் தன்மை, (உலண்டுப் பூச்சிபோல) சர்வ காரணத்துவாம்.

சமுத்திரம் அணை கடவாமலும், சூரிய சந்திராதிகள் நியமம் தவருமலும், இருக்கும்படி அவைகளைத் தையுந் தமதாணையி னிருத்தும் தன்மையே சர்வ நியந்திரத்துவம் ஆம்.

வித்தையை விரோதியாக உடையது அவித்தை.

சீவர்களுடைய தூலஞ் சூக்குமம் என்னு மிருவகைக் காரிய சரீரங்களின் மூலமாகையால் இதற்கு (இந்த அவித்தைக்கு) சீவ காரண சரீரம் என்னும் பெயரும் வந்தது. சீரணித்துப் போவதால் சரீரம்.

தார தம்மியமாவன:— மலின சத்துவரூப அவித்தையின் கண்ணுள்ள சத்துவ குணத்தின் ஏற்றத் தாழ்ச்சி.



கிஞ்சிக்ஞன் = அற்ப அறிவுடையவன்.

சாக்கிர முதல் மோட்ச பரியந்தம் சரீரத் திரயங்களில், நானென்னுமபிமான வுடையவனுய் ஜீவித்துக் கொண்டிருத்தலால் சீவனும்.

சித்துப் போலத் தோன்றியுஞ் சித்து லட்சணமின்மையால் சிதாபாசன்.

பிராக்ஞன்:- மிகுந்த அறிவுடையவன் அல்லது சுழுத்தியில் அவித்தையை விஷயமாக உடைய அவிநாசி ரூபப் பிரக்ஞையை யுடையவன்.

தத்துவ ஞான நிஷ்டன்:— பிரம்மான்மாக்களின் அபேதத்தை விஷயம் செய்வதான ஞானத்தில், நிஷ்டையுடையவன். (அல்லது) ஜக ஜீவ பரமாகிய 35 தத்துவங்களும் ஓர் அவஸ்தையிற் கண்டது, ஓர் அவத்தையி லில்லாமல் வியதிரேகித்துப் போகிறபடியால் இந்த 35 தத்துவங்களும் அதத்துவ மென்று கண்டு முப்பத்தாறும் தத்துவமாகிய இயாதார்த்த தத்துவமே தான் என்றறிந்து அதில் ஸ்திதி பெற்றிருப்பவனே தத்துவ ஞான நிஷ்டன்,

கர்ம நிஷ்டன்:— இக லோகத்திற்குரிய உழவு, தொழவு, வரைவு, வாணிபம், சிற்பம், வித்தை முதலியனவும்; பர லோகத்திற்குரிய, இயக்ஞம், தானம், தவம், விரதம், சீலம், உபாசனை முதலியனவுமாகிய கிருத்தியங்களில் நிஷ்டை யுடையவன்.

கிரந்தி = முடிச்சு. சற்குரு = சத்தை யுபதேசிப்பவன். குருவென்பதில் கு = அஞ்ஞானம்; ரு = ஞானம், ஆகவே ஞானத்தால் அஞ்ஞானத்தை நிவிர்த்தி செய்பவரே குருவாவர்.

ஞானத்திற்குச் சாதனமாய் சரீரத்திற்குள்ளே இருப்பது **அந்தக் கரணம்** ஆம்.

## பஞ்ச கோச விசார வாயிலாக ஐக்கிய அனு சந்தானம்.

வியஷ்டி ஸ்தூல சூக்குமங் காரண மென்னும் மூன்று சரீரங்களும், அந்தச் சரீரத்திரய அதிஷ்டான சேதனமுஞ் சேர்ந்து அகம் பிரம்மாஸ்மி என்னும் மகா வாக்கியத்திலுள்ள அகம் சப்தத்தின் வாச்சியமாம்.

அவ்வகம் சப்த வாச்சியத்தினுள் அடங்கிய முற் கூறிய மூன்று சரீரங்களுள்ளே அன்னமயம், பிராண மயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்த மய மெனும் பஞ்ச கோசங்களாம். அவற்றுள், சர்மாதி ஆறு தத்துவ ரூபமாயுள்ள தூல சரீரமே; **அன்ன மய கோசத்தின் சொரூபம்.**

பிராணாதி வாயுக்களும், வாக்காதி கன்மேந்திரியங் களுஞ் சேர்ந்தது; **பிராண மய கோசத்தின் சொரூபம்.**

மனதும், ஞானேந்திரியங்களும் கூடி **மனோ மய கோசத்தின் சொரூபம்.** இதிற் சித்தம் அடக்கம்.

புத்தியும், ஞானேந்திரியங்களும் கூடி **விஞ்ஞான மய கோசத்தின் சொரூபம்.** இதில் **அகங்காரம்** அடக்கம்.

பிரிய மோதப் பிரமோத விருத்தியும் அவித்தையுங் கூடி **ஆனந்த மய கோசத்தின் சொரூபம்.**

இவ் வைங்கோசங்களும் பரஸ்பரம் அன்னிய மாயும், பூர்வ பூர்வத்தின் உத்தரோத்தரம் ஆந்தர மாயு மிருக்கும்.



இவ் வைங் கோசங்களாகிய மூன்று சரீரங் களுள்ளே; அகம் அகம் (நான் நான்) என்று ஒரு அகம் சப்தத்தின் தொடர்ச்சி காணப்படுகின்றது.

அது எங்ஙனம் எனின்:— மூன்று சரீரங்களுள்ளே நான் பிறந்தேன், நான் வளர்ந்தேன், நான் மனுஷ் யன், நான் பிராம்மணன் என்றும்;

நான் உசுவசித்தேன், நிசுவசித்தேன், நான் பலவான், நான் பலஹீனன், நான் பேசினேன் என்றும்;

நான் சங்கற்பித்தேன், நான் சிந்தித்தேன், நான் கேட்டேனென்றும்;

நான் நிச்சயித்தேன், நான் அபிமானித்தேன்என்றும்;

நான் பிரியன், நான் அறியேன் என்றும், அகம் அகம் என, ஓர் அகம் சப்தத்தின் தொடர்ச்சி காணப் படுகின்றது. இத் தொடர்ச்சி ரூபமான அகம் சப்தத் திற்குப் பொருள் யாது? இக் கோசங்களே பொருளா மெனின்; அது, சுருதி, யுக்தி அனுபவங்களுக்கு விருத்தமாம்.

அவற்றுள்; அன்னமய கோசத்தின் ஆத்மத் தன்மையில் சுருதி, யுக்தி, அனுபவங்களின் விருத்தம் வருமாறு:— (சசிவன்ன போதம்) "ஒரு கூறு மல மாகும்..........." "கிளராதரத்துண்ணும்..........." (அறிவானந்த சித்தியார்) "அன்னமயங் கொண் டெடுத்த .........." (கைவல்லியம்) "பிறிவதெப்படி என்றக்கால்......." என்பன முதலியவை சுருதிகள்.

விவாத விஷயமாகிய அன்னமய கோசம் ஆத்மா வன்று காரிய மாதலால். எதெது காரியமோ அது அது ஆத்மாவன்று. கடம்போலவென்பது அனுமான வடிவ யுக்தி.

ஜன்மாதி சட்பாவ விகாரங்களோடும். பால்யாதி அவஸ்தைகளோடும், அஸ்த பாதாதி யவயவங்களோடுங், கருவல், சிவலை முதலிய ரூபங்களோடுங் கட்டை நெட்டை முதலிய பரிமாணங்களோடும், ஆண் பெண் என்னுமி லிங்கங்களோடும், கற்பித நாம ஜாதி ஆஸ்ரமங்களோடும், நாநா வித ஆமய ரூப வியாதிகளோடும், கூடிய இரத்த மாம்சாதி ஆறு தத்துவ வடிவமான தூல சரீரமே அன்ன மய கோசத்தின் சொரூபம். அன்னமய கோசத்தை அறிகின்ற நாம் கட திருஷ்டாவைப் போல, இதனினும் வேருய் இருக்கிரே மென்பது உபமான வடிவ யுக்தி.

அன்ன மயனினு மன்னியமாய், ஆந்தர மாயிருக்கும் பிராணமயன் ஆத்மா வென்னுஞ் சுருதியாற் கூறப்படும் பிராண மயனது ஆத்மத்துவம், அன்ன மய கோசத்திற்கு அனுத்மத்துவம் இருந்தாலன்றிப் பொருந்தா தென்பது அர்த்தாபத்தி வடிவ யுக்தி.

என் சரீரம் பருத்தது, என் சரீரம் இளைத்தது என்பன முதலிய வாய் என்னுடைய தென்று மமதைக்கு விஷயமாய்க் காணப்படுகின்றது அனுபவம்.

இவ்வாருன சுருதி யுக்தி அனுபவங்களோடு விரோதிப்பதால் இவ் வன்ன மய கோசம் நாம் அன்று (ஆத்மா அன்று).

இன்னும், வேறு யுக்திகள் வருமாறு:— அன்ன மயம்; அகம் விருத்திக்கு விஷயமாகுந் தன்மையால் ஆத்மா வாகு மெனின், சொப்பனத்திற் ருேன்றும் தூல சரீரத்தின் கண்ணும் நானென்னும் விருத்திக்கு விஷயமாகுந் தன்மை காணப் படுதலால் அத் தூல சரீரமும் ஆத்மாவாதல் வேண்டும், அன்றியும், இத்தூல சரீரம் சொப்பனுவஸ்தையிற் ருேற்ருததாலுஞ், சொப்பனம் கண்டவன் நான் என்றிவ்வாறு பிரத்திய பிஞ்ஞை சாக்கிரத்தில் எம்மிடத்தில் உண்டாவதாலும், இத்தூல சரீரமாகிய அன்ன மய கோசம் நாம் அல்ல என்பன முதலியவை வேறு யுக்திகள்.



இதனினு மன்னியமாய் ஆந்தரமாயிருப்பது பிராண மய கோசம். இந்தப் பிராண மய கோசந்தான் அகம் சப்தத்திற்கு பொருளாமோ வென்ருயு மிடத்து, பிராண மய கோசத்தின் ஆத்மத்துவமும் சுருதி, யுக்தி அனுபவங்களாற் பாதிக்ப்கபடுகின்றது. அவை வருமாறு:— (சசிவன்ன போதம்) ''உண்ணும் புனல் முக்கூறதின்... '' ''அழலுண் பொருள்களினுண்.........'' (அறிவானந்த சித்தியார்) ''ஊசு முடலின்.........'', (கைவல்லியம்) ''வெறியதோர் துருத்தி மூக்கின்...............'' என்பன முதலியன சுருதிகள்

அனுமான வடிவ யுக்தி:— விவாத விஷயமாகிய பிராண மய கோசம் ஆத்மா வன்று; ஜட மாதலால் எதெது ஜடமோ அதது ஆத்மா வன்று. ஸ்தம்பம் போல் என்பது அனுமான வடிவ யுக்தி.

உசுவாசம், நிசுவாசம், பசி, தாகம், பலம், பல ஹீனம், கண்ணை விழித்தல், மூடுதல், வசனித்தல் முதலிய விகாரங்களோடும் இந்தப் பிராண மய கோசம் நம்மாலறியப் படுகின்றது. நம்மா லறியப் படுகின்ற பிராணமய கோசத்தினும், கட திருஷ்டாவைப் போல் நாம் வேருக யிருக்கிரே மென்பது உபமான வடிவ யுக்தி.

பிராண மயனினும் அன்னியமாய் ஆந்திரமாயிருக்கும் மனோமயனே ஆத்மா வென்னுஞ் சுருதியாற் கூறப்படும் மனோமயனது ஆத்மத்துவம், பிராண மயனுக்கு அனாத்து மத்துவம் இருந்தாலன்றிப் பொருந்தாதென்பது அர்த்தாபத்தி வடிவ யுக்தி.

என் பிராணன் பசியினல் வருந்து கின்றது, என் வாக்கு அமிர்த வாக்கு, என்பன முதலிய வாய் இந்தப் பிராண மய கோசம் மமதைக்கு விஷயமாய்க் காணப்படுகின்றது அனுபவம்.

இவ்வாருன சுருதி, யுக்தி, அனுபவங்களோடு விரோதிப்பதால் இந்தப் பிராணமய கோசமும் நாம் அன்று. (ஆத்மா அல்ல)

வேறு யுக்திகள்:— பிராண மய கோசம் ஆத்மா என்பவனை இது கேட்க வேண்டும்! அதாவது, இந்திரியப் பிராணன்களது சமுதாயம் ஆத்மாவா? அல்லது அவை ஒவ்வொன்றும் தனித் தனி ஆத்மாவா? சமுதாயம் ஆத்மா எனின்; வாக்காதி கர்மேந்திரியங்களில் இலீன பாவத்தை அடைந்த நித்திரா அவஸ்தையில் ஆன்மா இல்லாமற் போக வேண்டும். தனித் தனி ஆன்மா வெனின்; தத்தம் விஷயங்களைக் கவரும் பொருட்டு அவ் விந்திரியங்கள் இத்தூல தேகத்தை வெவ்வேறு தேசத்தில் இழுத்தலால் அவற்றிற்கு ஸ்தானமான இத்தூல சரீரம் அநேக மத யானைகள் கட்டப் பட்டக் கதலியைப் போல், சீக்கிரத்தில் நாசத்தை யடையும் என்பன முதலியவை வேறு யுக்திகளாகும்.

இதனினு மன்னியமாய் ஆந்தரமாயிருப்பது மனோமய கோசம்; இந்த மனோ மய கோசம் தான் அகம்



சப்தார்த்தமாமோ வென்ருயு மிடத்து, அதன் ஆத்துமத்துவமும் சுருதி, யுக்தி, அனுபவங்களாற் பாதிக்கப்படுகின்றது. அவை வருமாறு:— (சசிவன்ன போதம்) "இனமுற வெண்ணவுள்ள கரணத்தில்... ..........." ஐயப்படலோர் பொருள் நிச்சயமாய் ........", "விழியைப் புமானென்னில்........", (அறிவானந்த சித்தியார்) "தனக்கு மனது சலித்த தென்றே ........", (கைவல்யம்) "கரணமாம் மனது புத்தி கருத்தாவாம் அவை யான் மாவோ.........", என்பன முதலியவை சுருதிகள் ஆகும். ஆதலால், விவாத விஷயமான மனோ மய கோசம் ஆத்மா வன்று.

மனோ மய கோசம் கரண மாதலால் ஆத்மா வன்று. எதெது கரணமோ அதது ஆத்மா வன்று. கோடரி போல; அல்லது, மனோ மய கோசம் சரீரம் போல விகாரி ஆதலால் ஆத்மா வன்று, என்பன முதலியவை அனுமான வடிவ யுக்திகள்.

சங்கற்பம், விகற்பம், சிந்தனம், கேட்டல், தொட்டல், பார்த்தல் முதலிய விகாரங்களோடும் இந்த மனோ மய கோசம் நம்மால் அறியப் படுகின்றது.

நம்மாலறியப் படுகின்ற மனோமய கோசத்தினுங் கட திருஷ்டாவைப் போல, நாம் வேருயிருக்கிருமென்பது உவமான வடிவ யுக்தி.

மனோமயனினு மன்னியமாய் ஆந்தர மாயிருக்கும் விஞ்ஞான மயனே, ஆத்மா வென்னுஞ் சுருதியாற் கூறப்படும் விஞ்ஞான மயனது ஆத்மத்துவம்; மனோமயனுக்கு அனாத்துமத்துவத் தன்மை இருந்தா லன்றிப் பொருந்தாது என்பது அர்த்தாபத்தி வடிவயுக்தி.

என் மனது சலனமாயிருக்கிறது, என் கண் மந்த திருஷ்டியை யுடையது என்பன முதலிய வாய் மமதைக்கு விஷயமாய்க் காணப்படுகிறது, அனுபவம்.

இவ்வாருன சுருதி, யுக்தி, அனுபவங்களின் விரோதத்தால் இந்த மனோமய கோசமும் **நாம் அன்று** (ஆத்மா அல்ல)

சுழுத்தி யவத்தையில் இந்த மனமானது இலீன பாவத்தையடைகிறதினுலும், உன்மத்தனைப்போன்று அநியத சுபாவ முடைய தாதலாலும், சத்துவ குண விஷிட்ட பூத காரிய மாதலாலும், சகுண மாதலாலும், சாவயவ மாதலாலும், உதயாஸ்தமன முதலிய விகாரங்களை யுடையதாதலாலும், சங்கற்பாதி கிரியையை யுடைய தாதலாலும் இந்த மனமும் **நாம் அன்று**. (ஆத்மா அல்ல)

ஒரு புருஷன் தண்டத்தால் அடித்தேன், மண்வெட்டியால் வெட்டினேன், எழுத்தாணியால் எழுதினேன், கோடரியாற் பிளந்தேன், என்பன முதலிய வாய் வியவகரிக்கு மிடத்து; கம்பு, மண்வெட்டி, எழுத்தாணி, கோடரி ஆகிய இவைகள், அடித்தல் முதலிய கிரியை கட்குக் கரண ரூபமாகப் பிரதீதி யாகின்றன. அவ்வாறே, நான் காதாற் கேட்டேன், துவக்கால், பரிசித்தேன் என்பன முதலியவாய்ச் சுரோத்திராதி யிந்திரியங்கள் சப்தக் கிரகணுதி ரூபக் கிரியைகளின் கரணங்களாகப் பிரதீதி யாகின்றன. ஆதலின், இந்தக் கரண ரூபமாகிய இந்திரியங்களும் **நாம் அன்று** என்பன முதலியவை வேறு யுக்திகள்.

மனோமய கோசத்தினு மன்னிய மாய், ஆந்தரமா யிருப்பது **விஞ்ஞான மய கோசம்.** இந்த விஞ்ஞான மய கோசந்தான் அகம் சப்தார்த்த மாமோ வென்ருயு மிடத்து, விஞ்ஞான மய கோசத்தினது ஆத்துமத்து வமும், சுருதி, யுக்தி, அனுபவங்களாற் பாதிக்கப் படுகின்றது. அவை வருமாறு:— (சசிவன்ன போதம்) "இனமுறவெண்ண.....மதியல்ல வந்த வகையே", "இடரின்புளதாய்........" (அறிவானந்த சித்தியார்) "இணங்கு நவகுணம்........", வேதாந்த சூடாமணி) நீலகுண விசேடமொடு.....", (கைவல்லியம்) "புத்தி கருத்தாவாம்.....", என்பன முதலியவை சுருதிகள்.



விவாத விஷயமாகிய விஞ்ஞான மய கோசம் ஆத்மா வன்று. இலயாதி யவஸ்தைகளை யுடைய தாதலால்; எதெது இலயாதி யவஸ்தைகளை யுடைதாமோ, அதது ஆத்மா வன்று. கடம்போல வென்பது அனுமான வடிவ யுக்தி.

நிச்சயம், அபிமானம் முதலிய கிரியை களோடும், சூட்சுமத்துவ, மந்தத்துவாதி தர்மங்களோடுங் கூடிய இந்த விஞ்ஞான மய கோசம், எம்மா லறியப் படுகின்றது. அப்படி அறியப்படு மிந்த விஞ்ஞான மய கோசத்தினுங், கட திருஷ்டாவைப் போல நாம் வேருக யிருக்கிருேம்: மற்றும், வத்தி ரூப உபாதி யினின்று ரூப பதார்த்தங்களை விளக்குந் தீபமானது, அத் திரி ரூப உபாதியுனும் எப்படிப் பின்னமோ, அப்படி, புத்தி ரூப உபாதியினின்று பாகியாந்தரப் பிரபஞ்சங்களை விளக்குஞ் சேதன ரூபமாகிய நாம் விஞ்ஞான மய புத்தியினும் வேரு யிருக்கிருேம் என்பன முதலியவை; உபமான வடிவ யுக்திகள்.

விஞ்ஞான மயனினு மன்னியமாய், ஆந்தரமா யிருக்கும் ஆனந்த மயனே, ஆத்மா வென்னுஞ் சுருதி

யாற் கூறப்படும் ஆனந்த மயனின் ஆத்துமத்துவம் விஞ்ஞான மயனுக்கு அனாத்து மத்துவம் இருந்தா லன்றிப் பொருந்தா தென்பது; அர்த்தாபத்தி வடிவ யுக்தி.

என் புத்தி; என் அகங்கார மென்பன முதலிய வாய் இந்த விஞ்ஞான மய கோசம் மமதைக்கு விஷய மாய்க் காணப்படுகின்றது; அனுபவ மாகும்.

இவ்வாறான சுருதி, யுத்தி, அனுபவங்களின் விரோ தத்தால் இந்த விஞ்ஞான மய கோசமும்; நாம் அன்று (ஆத்மா அல்ல)

அஸ்திர மாதலாலும், சாட்சிய மாதலாலும், சகுண மாதலாலும், கிரியாவா னாதலாலும், சாவயவ மாதலாலும், இந்த விஞ்ஞான மய கோசம் ஆத்மா வன்று என்பன முதலியவை வேறு யுக்திகள்.

இந்த விஞ்ஞான மயத்தினு மன்னியமாய் ஆந்தர மாயிருப்பது ஆனந்த மய கோசம். இந்த ஆனந்த மய கோசந்தான் அகம் சப்தார்த்த மாமோ வென்றாயு மிடத்து; அதன் ஆத்மத்துவமும் சுருதி, யுக்தி, அனு பவங்களாற் பாதிக்கப் படுகிறது. அவை வருமாறு:— அறிவானந்த சித்தியார்) ‘‘சேருஞ் சுகம் பொருள் ......’’, (கைவல்லியம்) ‘‘வரமறு துயிலானந்த .....’’, (விவேக சூடாமணி) ‘‘பரமமாமானந்தத்தின் ........’’, என்பன முதலியவை சுருதிகள்.

விவாத விஷயமாகிய ஆனந்த மய கோசம் ஆத்மா வன்று? ஒரு போதைய தாதலால்; எதெது ஒரு போதை யதாமோ, அத்து ஆத்மா வன்று; மேகம் போல என் பது' அனுமான வடிவ யுக்தி.



இஷ்ட வஸ்துக்களின் தரிசன சாமீப்பிய சை யோகத்தினால் தோற்றுவதாகிய, பிரிய மோதப் பிர மோத ரூப விருத்திகளையுஞ், சுழுத்தியில் நின்றும் எழுந்த காலத்தில், நானொன்று மறியாமற் றூங்கினே னென்னும் ஸ்மரணை காணப்படுகின்றது. இந்தஸ்மரணை சுழுத்தியில் அஞ்ஞானத்தின் அனுபவ மின்றிப் பொருந் தாதாதலின்; சுழுத்தியில் அஞ்ஞானத்தின் அனுபவம் கற்பிக்கப் படுகின்றது. இவ்வாறு, சுழுத்தியிற் அஞ் ஞானத்தையும் அனுபவிப்பது சாட்சி ரூபமாகிய நாமே. இந்தப்பிரகாரம் ஆனந்த மய கோசத்தை யறியும் யாம் கட திருஷ்டாவைப் போல; இதனிலும் வேறாக விருக்கிறோ மென்பது உவமான வடிவ யுத்திகள்.

சாட்சியுஞ், சேதனமுங், கேவலமும், நிர்க்குண மும் ஆத்மா வென்னுஞ் சுருதியாற் கூறப்படுஞ், சாட் சித்துவாதி தர்மத்தோடு கூடிய வஸ்துவின் ஆத்மத் துவம்; ஆனந்த மய கோசத்திற்கு அனாத்மத்துவ மிருந்தாலன்றிப் பொருந்தா தென்பது, அர்த்தாபத்தி வடிவ யுக்தி யாம்.

என் பிரியம் என் அஞ்ஞானம், என் சுகம் என்பன முதலிய வாய், இந்த ஆனந்த மய கோசம் மமதைக்கு விஷயமாய்க் காணப்படுகின்றது, அனுபவம்.

இவ்வாறான சுருதி, யுக்தி அனுபவங்களின் விரோ தத்தால், இந்த ஆனந்த மய கோசமும் நாம் அன்று. (ஆத்மா அல்ல)

இவ் வைங் கோசங்களும், எதனது பலத்தால் அறிபடு பொருள்களாகின்றனவோ, இவ் வன்ன மயாதி ஐங் கோசங்களையும், இது நானன்று, இது நானன்று

என நிஷேதிக்குங்கால், அந் நிஷேதத்தின் அவதி ரூபமாக எப்பொருள் சேஷிக்கின்றதோ, அத் தன்மய அனுபவ மாகிய **சாட்சி சொரூபமே நாம்.**

இவ்வாறு, அனுபவமாகிய சாட்சிக்கு ஆத்துமத்துவத்தை; (கைவல்லியம்) ''தூல சூக்கும வஞ்ஞானம் ............'', (விவேக சூடாமணி) விரிவகங்காரமாதி ............'', என்பன முதலிய சுருதிகள் கூறுகின்றன.

கோசங்கள் ஓரவத்தையிற் கண்டது, மற்றோ ரவஸ்தையிற் காணாதழிதலின் அசத்து. அவ்வாறே, அறியப்படு பொருள்களாதலாற் சடம். அப் பிரியமாய்க் கைவிடப்படுதலால் துக்க ரூபம். கோசங்களின் அனுபவ ரூப சாட்சியாகிய யாம், ஒரு தினத்தில் சாக்கிர சொப்பன சுழுத்திகளிற் போலவே தினாந்திரம், மாதாந்தரம், வருடாந்தரம், யுகாந்தரம், கற்பாந்தர மென்னும் இறப்பு, எதிர்வு நிகழ்வு ஆகிய முக்காலங்களிலும், ஒரே பிரகாரமாய் நிற்றலாற் **சத்து.**

தினாதியாகச் சொல்லப்படுங் காலங்க டோறுந் தோற்று நின்ற, சாக்கிர, சொப்பன, சுழுத்திகளிற் பிரதீதியாகும். ஸ்திரா ஸ்திர மூலாக் ஞான விஷயங்களை அறிவதால் (அறிபவனாதலால்) **நாம் சித்து.**

இந்தச் சத்துச் சித்து ரூபமாகிய எம் பொருட்டே மாலை, சந்தனம், வனிதை, ஆடை, கங்காதி தீர்த்தங்கள், இருக்காதி வேதங்கள், பூவாதி லோகங்கள், பிரமாதி தேவர்கள், குரு முதலிய யாவும் பிரியங்களாகின்றன. எம்மிடத்திலுள்ள பிரியம், எதன் பொருட்டும் ஆகின்றதில்லை. ஆதலால், நாம் நிரதிசயப் பிரேமைக்கு விஷயம். இவ்வாறு, நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாதலால்; சத்துச் சித்து ரூபமாகிய நான் **ஆனந்த ரூபன்.** (சச்சிதானந்த சொருபன்.)



இவ்வாறு, அகம் சப்தத்தின் சோதிதார்த்த மாகிய பிரத்திய காத்மாவினிடத்து நிர்க்குண, நிஷ்கிரிய, நிருவிகாரத்துவ முதலிய தர்மங்களை விஷயஞ் செய்வதாயுள்ள விருத்திப் பிரவாகத்தால் மனதை நிலைபெறச் செய்க. அகம் சப்த சோதிதார்த்தப் பிரத்தி காத்மாவின் ஞானமானது, எப்படி புருஷார்த்த சாதன ஞானத்திற்கு அனுகூலமோ; அப்படி, பிரம்ம சப்தத்தின் சோதிதார்த்த மாகிய பிரம்மத்தின் ஞானமும், புருஷார்த்த சாதன ஞானத்திற்கு அனுகூல மாதலாற் பிரம்ம சப்த அர்த்தத்தையுஞ், சோதனை செய்ய வேண்டும்.

விராட்டு, இரண்ய கர்ப்பம், அவ்வியாகிருதம் என்னுஞ் சமஷ்டி சரீரத் திரயங்களும்; சிருஷ்டி, திதி; சம்ஹாரம் என்னும் அவஸ்தாத்திரயமும்; வைசுவா நரன் சூத்திராத்மா. அந்தர்யாமி என்னும அபிமானத் திரயமும்; அதிஷ்டான சேதனமுஞ் சேர்ந்து; பிரம்ம சப்தத்திற்கு வாச்சிய மாம்.

பிரம்ம சப்த வாச்சியத்தினுள் அடங்கிய விராட்டாதி மூன்று சரீரங்களும்; மாயையின் காரியங்களுஞ் சாட்சாத் மாயையுமே யாம். மாயையும், மாயா காரியங்களும் இரஜ்ஜு சர்ப்பம் போல மித்தை. அன்றியுஞ், சிருஷ்டி அவத்தையிற் றோன்றும் விராட்டு சரீரம், பஞ்சீகரணத்திற்குப் பூர்வமாகிய ஸ்திதி காலத்திற் றோற்றுவதில்லை. இதுவே, விராட் சரீரத்தின் வியதிரேகமாம் ஸ்திதி காலத்திற் றோன்றும் இரண்ய கர்ப்ப சரீரம், தன் மாத்திரைகளின் உற்பத்திக்குப் பூர்வமாகிய, சம்ஹார அவத்தையிற் றோற்றுகிறதில்லை. இதுவே; இரண்ய கர்ப்ப சரீரத்தின் வியதிரேகமாம். சம்ஹார அவத்தையிற் றோன்றும் அவ் வியாகிருத சரீரம், தத்துவ ஞானத்திற்குப் பிறகு தோற்று கிறதில்லை. இதுவே, அவ்வியாகிருத சரீரத்தின் வியதி ரேகமாம்.

இவ்வாறு, விராட்டு சரீரம் சிருஷ்டி அவத்தையி லிருந்து, ஸ்திதி அவத்தையில் வியதி ரேகிக்கிறது. இரண்ய கர்ப்ப சரீரம் சிருஷ்டி ஸ்திதி என்னுமிரண்டு அவத்தைகளிலுமிருந்து, சம்ஹார அவத்தையில் வியதி ரேகிக்கிறது. அவ்வியாகிருத சரீரம், சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார மென்னும் மூன்று அவஸ்தைகளிலு மிருந்து, தத்துவ ஞானவஸ்தையில் வியதி ரேகிக்கின்றது.

மூன்று சரீரங்களின் அதிஷ்டான மாகிய சேதன மானது, சிருஷ்டி காலத்தில் விராட்டாதி மூன்று சரீரங் களோடு உபகிதமாய், வைசுவானரனென்று சொல்லப் படுகிறது.

திதி அவத்தையில், விராட்டு சரீரத்தை விடுத்து, இரண்ய கர்ப்பம், அவ்வியா கிருதம் என்னு மிரண்டு சரீரங்களோடுப கிதமாய், சூத்திராத்மா வென்று சொல்லப் படுகின்றது.

சம்ஹாரவத்தையில், விராட்டு இரண்ய கர்ப்ப மென்னு மிரண்டு சரீரங்களையும் விடுத்து, அவ்வியா கிருத சரீர மொன்றோடு பகிதமாய், அந்தர்யாமி யென்று சொல்லப்படுகிறது.

தத்துவ ஞானவத்தையில், விராட்டாதி மூன்று சரீரங்களையும் விடுத்து, கேவலஞ் சித்தென்று சொல்லப் படுகின்றது.

இவ்வாறு சிருஷ்டியாதி எல்லா அவஸ்தை களிலும், அவ்வியபிசாரியா யிருத்தலால் அதிஷ்டான சேத னமே, பிரம்ம சப்தத்தின் உண்மைப் பொருளாம். இந்தப் பிரகாரம், பிரம்ம சேதன மானது ஞானக் ஞான யாகிய சர்வ காலத்திலும்; ஒரே பிரகாரமாயிருத் தலால் அது சத்து.



விராட்டாதி சமஷ்டி சரீரங்களின் சாட்சி ரூப மாத லால் அது சித்து.

பூமா வாதலால் **ஆனந்தம்**. பூமா = வியாபகம்.

இவ்வாறு, பிரம்ம சப்தத்தின் சோதி தார்த்தமாகிய அதிஷ்டான சேதன ரூபப் பிரம்மத்திற்கும்; அகம் சப் தத்தின் சோதி தார்த்த மாகிய அதிஷ்டான சேதன ரூபப் பிரத்திய காத்மா விற்குஞ், சச்சிதானந்த ரூப இலக்ஷணம் ஏகமாதலால், அவ்விரண்டுங் கடாகாச மகாகாசம் போல; எப்போதும் அஸ்மி பதத்தின் இரு கின்றேன் என்னும் அர்த்த வடிவ ஏகமாம், ஆகலின் **அகம் பிரம்மம்; பிரம்மம் அகம்**. இந்தப் பிரத்தியக பின்ன பிரம்ம ரூப மாகிய என்னிடத்தில் சமஷ்டி, வியட்டி ரூப மாகிய சர்வப் பிரபஞ்சமுஞ் சுத்தி ரஜதம் போற் **கற்பிதம்**.

கற்பித ரஜதம், அதிஷ்டான சுத்தியின் அன்னிய மின்றி எப்படிச் சுத்தி ரூபமோ; அப்படி, கற்பித சமஷ்டி வியஷ்டி வடிவ சர்வப் பிரபஞ்சமும், அதிஷ் டான பிரத்தியக பின்ன பிரம்ம ரூபமாகிய எனக் கன்னியமாக வின்றி, யானகவே யிருக்கின்றேன்.

**அகம் பிரம்மம், பிரம்மம் அகம், சர்வம் பிரம்மம்.** எனச் சிந்திக்கத் தக்கது. பிரம்ம நாமங்களெல்லா வற்றையும் சிந்திக்கலாம்.

## சாக்கிராதி அவஸ்தைகளின் இலட்சணம்.

சர்வ இந்திரியங் களினுலும், பாகியார்த்த ஞானத் துடன், கருத்துருத்துவாதி ஆகாரமாய், ஸ்திரமாய்,

எதுவரை வியவகரிக்கப் படுகின்றதோ, அதுவரை, **சாக்கிரம்.**

சூக்கும சரீரத்தை விடாமல், தூல சரீரத்தில் பிரவேசித்தவன், **விசுவன்.**

சொப்பன சுழுத்திகளிற் றேன்ருமற், சாக்கிர முதல் மோட்ச பரியந்தம் இருப்பவன் **வியாவகாரிக சீவன்.**

இந்திரியங்களின் பாகியார்த்த ஞானமின்றி மனது தானே ஜாக்கிரத்தின் வாசனு பரிகற்பித விஷயாகாரமாய்ப், பரிணமித்துக் கருத்துருத்துவாதி யாகாரமாய், அஸ்திரமாய், எந்த மட்டுக்கும் வியவகரிக்கப் படுகின்றதோ, அந்த மட்டுக்கும் **சொப்பனம்.**

தேஜஸ் சப்த வாச்சியமாகிய, அந்தக் கரணத்தை உபாதியாக வுடையவன், **தைஜசன்.**

சொப்பனத்திற் றேன்றி, ஜாக்கிரத்தில் விழித்தவுடன், பிரம்ம ஞான மின்றிப் பாத மாகின்ற படியால், **பிராதிபாசிக சீவன்.**

சொப்பனத்திற் கற்பிக்கப் படுவோனுதலால் **சொப்பன கற்பிதன்.**

இந்திரியங்களாற் றேன்றும் ஞானமும், மனதின் விஷயகாரப் பரிணமமுங், கருத்துருத்து வாதியாகாரமுமின்றி, புத்தியானது காரணன் மகமாக விருக்கும் அவஸ்தை, **சுழுத்தி.**

விசுவ தைஜஸரென்னும் இருவர்களையும் அபேட்சித்துப், பரமார்த்தத் தன்மையு முடையோனுதலாற், **பாரமார்த்திக சீவன்.**

ஞானமே சொரூப மானவன், **ஞானத்மா.**



கூடம் போல நிர் விகாரமாயிருப்பது, **கூடஸ்தன்.**

கூடமாவது = கொல்லன் அடைக்கல்.

சுர நரதிரியக்காதி யனைத்துமாய்விளங்குவதே, **விராட்டு**

விசுவ சம்பந்தமான, சர்வ நராபி மானி யாதலால் **வைசுவாநரன்.**

சொர்ணம் போல பிரகாச மாகி, ஞான சக்தியுடையது அந்தக் கரணம் ஞானேந்திரியங்களை, யுபாதியாக யுடையவனுதலால், **இரண்ய கர்ப்பன்.**

முத்தினுள் நூலானது அனு சூதமாயிருப்பது போல் தூலப் பிரபஞ்ச முழுவதிலும் அனு சூத மாயிருப்பதால் **சூத்திரத்மா.**

அவ்வியாகிருதம் = வெளிப்படாதது. அந்தர்யாமி = உள்ளே யிருந்து அசைப்பவன். வாதிப் பிரதிவாதிகளுக்கிடையே யிருந்து கொண்டு, தான் வாதிப் பிரதி வாதிகளாகமல் விருப்பு வெருப்பின்றி, உதாசீனமாயிருந் தறிபவன் சாக்ஷி.





| அந்தக் காரணம் | கோளகம் | தேவதை | தொழில் |
|---|---|---|---|
| உள்ளம் | சிரம் | சதாசிவம் | தரித்தல் |
| மனம் | கண்டம் | சந்திரன் | சங்கற்ப விகற்பம் |
| புத்தி | இருதயம் | பிரம்மா | நிச்சயம் |
| சித்தம் | நாபி | விஷ்ணு | ஸ்மரணை |
| அகங்காரம் | சர்வாங்கம் | உருத்திரன் | அபிமானம் |
| **ஞானேந்திரியங்கள** | | | |
| சுரோத்திரம் | செவி | திக்கு | சப்தக் கிரகணம் |
| துவக்கு | மெய்(தோல்) | வாயு | ஸ்பரிசக் கிரணம் |
| சட்சு | கண் | சூரியன் | உருவக் கிரகணம் |
| சிங்வை | நாக்கு | வருணன் | இரசக் கிரகணம் |
| ஆக்கிராணம் | மூக்கு | அசுவினி குமாரர் | கந்தக் கிரகணம் |
| **வாயுக்கள** | | | |
| வியானன் | சர்வாங்கம் | விசிட்டன் | தாங்குதல் |
| பிராணன் | இருதயம் | விசுவகர்த்தா | உசுவாச நிசுவாசம் |
| அபானன் | குதம் | விசுவயோனி | சீரணிப்பித்தல் |
| சமானன் | நாபி | அசன் | இழுத்துச் செல்லல் |
| உதானன் | கண்டம் | சயன் | கடைதல் |
| **கர்மேந்திரியங்கள்** | | | |
| வாக்கு | வாய் | அக்கினி | வசனித்தல் |
| பாணி | கை | இந்திரன் | கிரகணாப் பரித்தியாகம் |
| பாதம் | கால் | சூரியன் | கமனுகமனம் |
| பாயுறு | குதம் | இயமன் | மலவிஸர்ச்சனம். |
| உபஸ்த்தம் | குய்யம் | பிரஜாபதி | ஆனந்தித்தல் |

## பிழையும், திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| முகவுரையில் | 10 | ஆசரிய | ஆசாரிய |
| 5 | 20 | வெளிப்படுத்தல் | வெளிப்படுதல் |
| 7 | 28 | மென்றர் | மென்றனர் |
| 11 | 10 | யுடைவன் | யுடையவன் |
| 12 | 15 | சொர்ரூபம் | சொரூபம் |
| 15 | 10 | வென்ருயு | வென்ருராயு |
| 15 | 12 | பாதிக்ப்கபடு | பாதிக்கப்படு |
| 20 | 26 | அத்து | அதது |